# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

**விளம்பி – கார்த்திகை – 2018 – நவம்பர்**




கோவிலூர் பல் மருத்துவமனை தொடக்க விழா

77

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விளம்பி - கார்த்திகை - 2018 - நவம்பர் இதழ் - 77

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய செளந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்


1. ஆசியுரை 2
2. காளமேகத்தின் சிலேடைப்பாடல்கள் 4
3. சித்த ஞானம் 10
4. பட்டினத்தார் பைந்தமிழ் 13
5. திருக்குறள் தெளிவுரை 19
6. திருவிளையாடற்புராணம் 22
7. மடாலய நிகழ்வுகள் 24


தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00




உ
சிவமயம்

# இறை வணக்கம்

பச்சைவண்ண மாலுக்குப் பின்பிறந்த பங்கயத்தைப்
பரமனுக்குத் தாரமெனும் பாவை யாளைப்
பைரவியைச் சங்கரியைப் பார்வதியை உமையவளைப்
பார்க்கவியைப் பரமசிவன் பார்த்துப் பார்த்தே
இச்சைகொள்ள வைத்தவளை இனியமுகம் கொண்டவளை
ஏழ்பிறப்பும் துணைநிற்கும் இனிய தாயை
எம்பெருமான் சிவனோடு போட்டிநடம் பயின்றவளை
ஈரடியாம் தாமரையை எமக்குக் காட்டி
அச்சமுறச் சமணர்களை அணிமதுரைப் பதியினிலே
அன்றுதிரு நீற்றாலே அயர வைத்த
அருட்காழிச் சண்பையர்கோன் ஞானப்பால் உண்ணவைத்த
அன்புடைய திருநெல்லை அம்மை யாளை
மச்சமுதல் மீனினங்கள் மகிழ்ந்துமது நதியாடி
மகிழ்கின்ற திருத்தலமாம் சமிவ னத்தை
மன்பதையில் நண்ணிவரும் மாதவர்க்கே அருள்புரியும்
மாதரசி அடிவணங்கி மகிழு வோமே !

(காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்)

## ஆசியுரை

### சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

தேசப்பிதா காந்தி அவர்கள் கடைப்பிடித்த அகிம்சை, சத்யாகிரகம், ஒத்துழையாமை, உண்ணாவிரதம் அனைத்தும் நம்முடைய மூதாதையர்கள் பலநூறு ஆண்டுகளுக்கு முன்பே கடைப்பிடித்த கொள்கைகளே; தத்துவங்களே. மூவர் முதலிகள் என்று அழைக்கப்பட்ட திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆகிய மூவரில் காலத்தால் மூத்தவரான திருநாவுக்கரசு சுவாமிகள், மேலே சொன்ன அனைத்துச் செயல்களையும் முன்மாதிரியாக நடத்திக் காட்டியவர்.

திருநாவுக்கரசு சுவாமிகள் ஏழு அல்லது எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்தவர். 81 வயது வரை வாழ்ந்து இறைத்தொண்டும், கைத்திருத் தொண்டும் செய்து சிவனருள் பெற்றவர். பல்லவ மன்னரால் பலவிதமான இன்னல்களுக்கு ஆட்பட்டவர். சகித்துக் கொண்டவர். சுண்ணாம்பு நீற்றறையில் இவரை அடைத்த காலத்திலும் எதிர்வினை ஆற்றாமல் சிவன் திருவடிகளை நீள நினைத்தே பாதிப்பில்லாமல் மீண்டவர். கல்லைக் கட்டிக் கடலில் இறக்கிய காலத்தும் சிவனருளை மட்டுமே சிந்தித்துப் பொறுத்திருந்து மீண்டவர். இவர் பொறுமையின் சின்னமாகவும் மறு உருவமாகவும் திகழ்ந்தவர்.

திருநாவுக்கரசு சுவாமிகள் பழையாறை வடதளி என்னும் திருத்தலத்திற்குச் சென்று சிவனைத் தரிசிக்க முயன்ற காலத்தில் சிவனருள் வடிவமே கண்ணிற்குத் தெரியாத அளவிற்குக் கற்றாழைப் புதர் மண்டிக் கிடந்தனவாம். இந்த, சிவனருள் உருவை மறைத்த செயல்கள் சமணங்களால் ஆனதே. இதனைக் கண்ட திருநாவுக்கரசு சுவாமிகள் மனம் நொந்து சிவனைத் தரிசிக்காமல் இந்த இடத்தை விட்டு அகல மாட்டேன் என்று அமைதி முறையிலான தன்னுடைய எதிர்ப்பைத் தெரிவித்தார். இந்த அமைதிப் போராட்டமே பின்னாளில் சத்தியாகிரகம் என்று அழைக்கப்பட்டது. அந்த இடத்திலேயே திருநாவுக்கரசு சுவாமிகள் உண்ணாவிரதத்தையும் மௌனவிரதத்தையும் கடைப்பிடித்தார்கள்.

செய்தி அறிந்த அப்பகுதி சிற்றரசன் திருநாவுக்கரசு சுவாமிகளை சந்தித்து வேண்டிக் கெஞ்சிய பொழுதும் அசைய மறுத்து ஒத்துழையாமல் இருந்தார். பின்னர் அரசனுடைய ஆணையாலே கற்றாழைப் புதர்கள் அகற்றப்பட்டு, சிவலிங்கங்கள் தெளிவாகப் புலப்பட்டன. அவற்றைத் தரிசித்துப் பின்னரே பதிகம்பாடி, சிவனைச் வணங்கி விடைபெற்றார்.

*தலையெ லாம்பறிக் குஞ்சமண் கையருள்*
*நிலையி னான்மறைத் தான்மறைக் கொண்ணுமே*
*அலையி னார்பொழி லாறை வடதளி*
*நிலையி னானடி யேநினைந் துய்ம்மினே.*

இவ்வாறாக, காந்திமகான் கடைப்பிடித்த அனைத்துக் கொள்கைகளும் ஏழாம் நூற்றாண்டிலேயே நடத்திக் காட்டிய பெருமைக்குரியவர் நம் திருநாவுக்கரசு சுவாமிகள் ஆவார்.

இத்தகைய நிகழ்ச்சிகள் நம் மூவர் முதலிகள் வாழ்க்கையிலும் மற்றைய நூற்றுக்கணக்கான ஞானிகள் வாழ்க்கையிலும் காணக்கிடைக்கின்றன. அவற்றை எல்லாம் கற்று அறிந்து நம்மைப் பதப்படுத்திக் கொள்வோமாக !

***ஸ்ரீ சற்குருநாதன் துணை***



## காளமேகத்தின் சிலேடைப்பாடல்கள்

சிலேடைப் பாடல்கள் என்றாலே காளமேகம்தான் நினைவுக்கு வருவார். ஆசுகவி என்றழைக்கப்படும் அவரைச் சிலர் வசைபாட வல்லவர் என்று அழைப்பதும் உண்டு. அம்பிகையின் அருள் பெற்ற வரகவியான காளமேகத்தின் கவியாற்றல் பிரமிக்கத் தக்கது. இனி அவர் பாடிய சிலேடைப் பாடல்களைப் பார்க்கலாம். இவையனைத்தும் திருமலைராயன் அவைப் புலவர்களான 64 தண்டிகைப் புலவர்கள் கேட்ட சமிக்ஞைகளுக்காகப் பாடியவை. ஒரு சொல்லின் பொருள் ஒன்றாக இருக்கும். ஆனால் பொருள் வேறொன்றும் இருக்கும். இப்படிப்பாடுதல் எளிதன்று; ஆனால் காளமேகப் புலவருக்கு இது மிக எளிதாக இருந்தது.

அவையில் இருந்த ஒரு புலவர் காளமேகத்தை வீழ்த்த எண்ணி ஆமணக்கும் யானையும் ஒன்றென உம்மால் பாட முடியுமா? என்றதும் காளமேகம் கேட்ட புலவர் திகைக்கும்படி விரைந்து பாடினார்.

**ஆமணக்குக்கும் யானைக்கும்**

***முத்(து)இருக்கும் கொம்(பு) அசைக்கும் மூரித்தண்(டு) ஏந்திவரும்***
***கொத்(து)இருக்கும் நேர குலைசாய்க்கும் – எத்திசைக்கும்***
***தேமணக்கும் சோலைத் திருமலைரா யன்வரையில்***
***ஆமணக்கும் மால்யானை யாம்.***

**பொருள் :**

தேன் மணக்கும் சோலைகள் உடைய திருமலைராயனது மலையில் உள்ள மலைச் சாரலில் ஆமணக்கும் பெரிய யானையாகும். அது எவ்வாறு எனில்

**ஆமணக்கு** – வித்துகளோடு கூடிய கிளைகளை அசைத்துக் கொண்டு இருக்கும் பெரிய தண்டுகளை மேலே ஏந்திக் கொண்டிருக்கும். பூங்கொத்துக்களை உடையதாய் இருக்கும். வரிசையாகக் குலைகளை உடையதாய் இருக்கும்.

**மால் யானை** – பெரிய யானை முத்துக்களை உடைய கொம்பினை அசைக்கும். பெரிய தண்டுகளை ஏந்தியபடி வரும். மத்தகத்தில் அங்குசத்தால் குத்திய கொத்து இருக்கும். மலையிலே உள்ள வாழைக் குலைகளை உண்பதற்காகச் சாய்க்கும்.

**வைக்கோலுக்கும் யானைக்கும்**

***வாரிக் களத்(து)அடிக்கும் வந்துபின்பு கோட்டைபுகும்***
***போரில் சிறந்து பொலிவாகும் - சீர்உற்ற***
***செக்கோல மேனித் திருமலைரா யன்வரையில்***
***வைக்கோலும் மால்யானை யாம்.***

**பொருள் :** சிறப்புப் பொருந்திய செந்நிற மேனியை உடைய திருமலைராயனது மலைச்சாரலில் வைக்கோல் யானைக்குச் சமமாகும். எவ்வாறு எனில்

**வைக்கோல் -** அறுவடை செய்யும் போது களத்திற்குக் கொண்டு வந்து வாரிக் களத்து மேட்டில் அடிக்கப்படும். அதன் பின் நெல் சேமிக்கும் கோட்டைக்கு வந்து சேரும். வைக்கோல் போராக்கும் போது சிறந்து விளங்கும்.

**மால் யானை -** போர்க் களத்தில் பகைவர்களை வாரி அடிக்கும். பின்பு கோட்டைக்கு வந்து சேரும். போர்த்துறையில் மேம்பட்டதாய் விளங்கும்

**பாம்புக்கும் வாழைப்பழத்திற்கும்**

***நஞ்சிருக்கும் தோல் உரிக்கும் நாதர்முடி மேல்இருக்கும்***
***வெஞ்சினத்தில் பல்பட்டால் மீளாது - விஞ்சுமலர்த்***
***தேம்பாயும் சோலைத் திருமலைரா யன்வரையில்***
***பாம்பாகும் வாழைப் பழம்.***

**பொருள் :** மிகுதியான மலர்கள் தேனைப் பொழியும் திருமலைராயனின் மலைச் சாரலில் வாழைப்பழம் பாம்பாகும். எவ்வாறு எனில்

**பாம்பு -** அதனிடம் நஞ்சு இருக்கும். சிவபெருமான் திருமுடியை அலங்கரிக்கும்; கொடிய சினங்கொண்டு ஒருவர்மேல் அதனுடைய பல் பட்டால் பட்ட உயிர் மீளாது.

**வாழைப்பழம் -** நன்கு பழுத்தபோது நைந்துபோய் இருக்கும். இறைவனது அபிடேகப் பொருளில் பஞ்சாமிருதமாக விளங்கும்; அதனை உண்ணுங்கால் நமது பல் பட்டால் மீளாது.

**பாம்புக்கும் எள்ளுக்கும்**

***ஆடிக் குடத்(து)அடையும் ஆடும்போ தேயிரையும்***
***மூடித் திறக்கின் முகம்காட்டும் - ஓடிமண்டை***
***பற்றில் பரபரெனும் பாரில்பிண் ணாக்கும்உண்டாம்***
***உற்றிடுபாம்(பு) எள்எனவே ஓது.***

**பொருள் :** பாம்பு படம் எடுத்து ஆடியபின் குடத்திலே சென்று அடையும். ஆடும் போதே சீத்துப் பூத்தென்று இரையும். குடத்தை மூடித் திறந்தால் தன் தலையை உயர்த்திக் காட்டும். அதன் தலையைப் பற்றிக் கொண்டால் பர பர என்னும். பிளவு பட்ட நாக்கு அதற்கு உண்டு.

**எள்** - செக்கிலே எண்ணெயாகிக் குடத்திலே அடையும். செக்கிலே ஆட்டும் போது இரைச்சல் இடும். குடத்தை மூடி வைத்த மூடியைத் திறந்தால் பார்ப்பவரின் முகத்தைக் காட்டும். தலையிலே தேய்த்துக் கொண்டால் பரபரவெனக் குளிர்ச்சி உண்டாகும். இதனால் பாம்பும் எள்ளும் சமமாகும்.

**பாம்புக்கும் எலுமிச்சம் பழத்திற்கும்**

***பெரியவிட மேசேரும் பித்தர்முடி ஏறும்***
***அரிஉண்ணும் உப்புமேல் ஆடும் - எரிகுணமாம்***
***தேம்பொழியும் சோலைத் திருமலைரா யன்வரையில்***
***பாம்பும் எலுமிச்சம் பழம்.***

**பொருள் :** தேன் சொரியும் மலர்களை உடைய திருமலைராயனது மலைச் சாரலில் பாம்பும் எலுமிச்சம்பழமாகும்; எவ்வாறெனில்

**பாம்பு** - மிகுந்த நஞ்சை உடையது. பித்தன் என்று அழைக்கப்படும் சிவபெருமான் திருமுடிமேல் அபிடேகத்தின் போது தேய்க்கப்படும். காற்றை உணவாகக் கொள்ளும். அதன் மூலம் தன் உடலை உப்பிக் கொள்ளும். தலையை மேலே தூக்கி ஆடும். சினமாகிய குணத்தை உடையது.

**எலுமிச்சம்பழம்** - பெரியவர் கையிலே கொடுக்கப்படும். பித்தம் பிடித்தோர் தலையில் தேய்க்கப்படும். ஊறுகாய்க்காக அரியப்படும். உப்பை அதன்மேல் தூவுவர். அதன் சாறு எரிச்சலைத் தரும். அதனால் பாம்பும் எலுமிச்சம் பழமும் ஒன்றே.

**முகுந்தனுக்கும் முறத்துக்கும்**

***வல்அரியாய் உற்றிடலால் மாதர்கையில் பற்றிடலால்***
***சொல்லரிய மாப்புடைக்கத் தோன்றுதலால் - வல்லோர்***
***அகந்தனிலே வாழ்தலால் அன்(று)உல(கு) அளந்த***
***முகுந்தனுமே ஆகும் முறம்.***

**பொருள் :** அந்நாளில் வாமனன் ஆகி உலகளந்த திருமால் முறத்திற்கு ஒப்பாவான். எவ்வாறு எனில்

**முகுந்தன்** - வலிய நரசிங்கமாகத் தோன்றியதாலும் ஆயர்பாடியில் பெண்கள் கையில் பற்றிடலானும் சொல்லுதற்கு அரிய குவலயாபீடம் என்னும் யானையைக் கொல்ல அவதரித்தமையாலும் வலியவர் உள்ளங்களில் கடவுளாய் வீற்றிருத்தலினாலும்.

**முறம்** - கொழித்தற்கு உரிய கருவியாய் அமைதலினாலும் பெண்கள் கையில் பற்றிப் பயன்படுத்தலினாலும் சொல்லரிய அரிசிமாவைப் புடைக்கப் பயன்படுத்தலினாலும் பலருடைய வீடுகளில் இருத்தலினாலும் முகுந்தனும் முறமும் ஒன்றே.

**சந்திரனுக்கும் மலைக்கும்**

***நிலவாய் விளங்குதலால் நீள்வான் படிந்து***
***சிலபோ(து) உலாவுதலால் சென்று - தலைமேல்***
***உதித்து வரலால் உயர்மா மலையை***
***மதிக்கு நிகராக வழுத்து.***

**பொருள் :** நிலவாய் ஒளி தருவதாலும் நெடிய வானத்தில் படிந்து சிலபோது உலவுவதாலும் தலைக்கு மேலாக உதித்து வருவதாலும் மதிக்கு நிகராகும் மலை. எங்ஙனம் எனில்

**மதி** - நிலவு என்ற பெயரில் ஒளி தருவதாலும் நீண்ட வானத்தில் சிலபோது சஞ்சரித்து வருவதாலும் மறைந்து சென்று மீண்டும் தலைமேல் தோன்றி வருவதாலும்

**மலை** - பூமியில் தோன்றி விளங்குதலினாலும் பூமியில் தோன்றித் தலைக்கு மேலாக விளங்குவதாலும் உயர்ந்த மலையினை மதிக்கு ஒப்பாகச் சொல்க.

**நாய்க்கும் தேங்காய்க்கும்**

***ஓடும் இருக்கும் உள்வாய் வெளுத்(து)இருக்கும்***
***நாடும் குலைதனக்கு நாணாது - சேடியே***
***தீங்காய(து) இல்லாத் திருமலைரா யன்வரையில்***
***தேங்காயும் நாயும்நேர் செப்பு.***

பொருள் : தோழியே ! தீங்கு இல்லாத திருமலைராயன் எல்லைக்குட் பட்ட நாட்டிலே தேங்காயும் நாயும் சமம் என்று சொல்க; எவ்வாறு எனில்

தேங்காய் - இதற்கு ஒரு ஓடு உண்டு. அதன் புறம் வெண்மையான தேங்காயைக் கொண்டிருக்கும். அனைவரும் விரும்புமாறு குலை குலையாகத் தொங்கும். அது நாணப்படுவதில்லை.

நாய் - ஓடிக் கொண்டே இருக்கும். இருந்த இடத்தில் இருக்கவும் செய்யும். அதன் வாயின் உட்புறம் வெண்மையாக இருக்கும். விருப்பமான குலைத்தலில் ஈடுபடும். ஆதலால் நாயும் தேங்காயும் சமமே.

**மீனுக்கும் பேனுக்கும்**

***மன்னீரி லேபிறக்கும் மற்(று)அலையி லேமேயும்***
***பின்னீச்சில் குத்தும் பெருமையால் - சொன்னேன்கேள்***
***தேனுந்து சோலைத் திருமலைரா யன்வரையில்***
***மீனும்பே னும்சரியா மே.***

பொருள் : தேன் பாய்கின்ற சோலைகளை உடைய திருமலைராயனது மலைச்சாரலில் மீனும் பேனும் சரிசமமே. எவ்வாறு எனில்

மீனானது - நிலையான நீரிலே பிறக்கும். அலையிலே மேயும். நீந்தும் பொழுது இரைகண்ட இடத்தில் குத்தும்.

பேனானது - தலையிலே நிலைத்த பேன் முட்டையில் இருந்து தோன்றும். அடர்த்தியான தலை மயிரின் இடையிலே தோன்றும். பெண்களால் ஈச் என்ற ஒலியோடு குத்தப்படும். எனவே மீனும் பேனும் சரிசமமே.

**பனைமரத்துக்கும் வேசைக்கும்**

***கட்டித் தழுவுதலால் கால்சேர ஏறுதலால்***
***எட்டிப் பன்னாடை இழுத்தலால் - முட்டப்போய்***
***ஆசைவாய்க் கள்ளை அருந்துதலால் அப்பனையும்***
***வேசையெ னலாமே விரைந்து***

**பொருள் :** பனைமரமும் வேசைக்கு நிகர் . எவ்வாறு எனில்

**பனைமரம்** - பனைமரத்தில் ஏறும்பொழுது கட்டித் தழுவிக் கொண்டே இரு கால்களையும் சேர்த்து வைத்து ஏறுதலாலும் உச்சியருகே சென்றதும் பன்னாடையை எட்டி இழுத்தலாலும் நெருங்கிச் சென்று ஆசையுடன் கள்ளை அருந்துதலாலும்

**வேசை** - தன்னிடத்தில் வருபவரைக் கட்டி அணைப்பதனாலும் கால் சேர அனுபவிப்பதாலும் அவளின் ஆடையை எட்டி இழுத்தலாலும் நெருங்கிச் சென்று அவள் வாய் எச்சிலாகிய கள்ளை அருந்துதலாலும் பனையும் வேசையும் சமமே.

**தென்னை மரத்திற்கும் வேசைக்கும்**

***பாரத் தலைவிரிக்கும் பன்னாடை மேல்சுற்றும்***
***சோர இளநீர் சுமந்(து) இருக்கும் - நேரேமேல்***
***ஏறி இறங்கவே இன்பமாம் தென்னைமரம்***
***கூறும் கணிகைஎன்றே கொள்.***

**பொருள் :** கணிகை தென்னை மரத்துக்குச் சமமானது என்று சொல்க. எவ்வாறு எனில்

**தென்னை மரம்** - நாற்புறமும் பரந்து விரிந்திருக்கும்படி உச்சியில் ஓலைகளை விரித்து நிற்கும் பல செருவல்கள் சூழ விளங்கும். ஓலைகளுக்கு இடையே இளநீரைச் சுமந்து நிற்கும். முறையாக மேலேறி இளநீரை அருந்திப் பின்னர் இறங்குவதால் இன்பமாகும்.

**எகணிகை** - நாற்புறமும் பரந்திருக்குமாறு கூந்தலை விரித்து இருப்பாள். சிறப்பான பல ஆடைகளை அணிந்திருப்பாள். இன்பம் தருமாறு விளங்கும் இளநீரைப் போன்ற மார்பகங்களைச் சுமந்திருப்பாள். அவள் மேல் ஏறி அனுபவித்து இறங்குதல் இன்பமாம். ஆதலால் தென்னைமரம் வேசைக்கு நிகர் என்று சொல்லலாம்.

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

*இந்து அமிழ்தமடி - அகப்பேய்*
*இரவி விடமோடி*
*இந்து வெள்ளையடி - அகப்பேய்*
*இரவி சிவப்பாமே* 45

விளக்கம் : இந்து எனப்படும் சந்திரன் அமுதமயமானவன். சூரியன் நஞ்சு போன்றவன். சந்திரன் நிறம் வெள்ளை. சூரியன் நிறம் சிவப்பு. ஒன்று குளிர்ச்சி பொருந்தியது. இன்னொன்று வெம்மை உடையது.

*ஆணல பெண்ணலவே - அகப்பேய்*
*அக்கினி கண்டாயே*
*தானுவும் அப்படியே - அகப்பேய்*
*சற்குரு கண்டாயே* 46

விளக்கம் : மேற் சொன்ன சந்திர சூரியர் ஆணுமல்லர் பெண்ணுமல்லர். நெருப்பானவர்கள் என்பதை நீ அறிவாயே. தானுவும் அப்படியே. ஆனால் அவன் சற்குரு என்பதை உணர்வாயே.

*என்ன படித்தாலும் - அகப்பேய்*
*எம்உரை ஆகாதே*
*சொன்னது கேட்டாயே - அகப்பேய்*
*சும்மா இருந்துவிடு* 47

விளக்கம் : என்ன படித்தாலும் ஏது பயன்? என் உரை உனக்கு ஆகாதே. நான் சொன்னதைக் கேட்டாய் அல்லவா? ஒன்றும் செய்யாமல் இருப்பதே சுகம் என்பது ஞானியர் வாக்கு.

*காடும் மலையுமடி - அகப்பேய்*
*சைவம் ஆனால்என்?*
*வீடும் வெளியாமோ - அகப்பேய்*
*மெய்யாக வேண்டாவோ?* 48

விளக்கம் : காடும் மலையும் சைவத்தைச் சார்ந்தவை. அதனால் என்ன பயன்? நாம் இருக்கும் வீடு வெட்ட வெளியாகுமா? அவை மெய்யாக வேண்டாமா?

*பரத்தில் சென்றாலும் - அகப்பேய்*
*பாரிலே மீளுமடி*
*பரத்துக்கு அடுத்த இடம் - அகப்பேய்*
*பாழ்அது கண்டாயே* 49

**விளக்கம் :** வழிபடுதலில் மேலான நிலையை அடைந்தாலும் உலகில் அங்கிருந்து அது மறுபடியும் வரும். மேலான தன்மைக்கு அடுத்த இடம் ஒன்றுமில்லாப் பாழ் வெளியே.

*பஞ்ச முகமேஏது - அகப்பேய்*
*பஞ்சு படுத்தாலே*
*குஞ்சித பாதமடி - அகப்பேய்*
*குருபாதம் கண்டாயே* 50

**விளக்கம் :** பஞ்சு உருவாகின்ற போது அதனைத் தூய்மைப் படுத்த ஒரு கோலால் அடிப்பர். பின் நூலாகத் திரிக்கப்படும். அதுபோல நம்மகம் தூய்மைப்பட இறைவனுடைய ஒரு கால் ஊன்றி ஒரு கால் நிறுத்தி ஆடும் குஞ்சிதபாதமே நமக்குத் துணையாகும்.

*பங்கம் இல்லையடி - அகப்பேய்*
*பாதம் இருந்தஇடம்*
*கங்கையில் வந்தஎல்லாம் - அகப்பேய்*
*கண்டு தெளிவாயே* 51

**விளக்கம் :** இறைவனின் திருவடி இடம் கிடைத்தால் நமக்கு எந்தவிதக் குற்றமும் வாராது. கங்கையில் நீராடினால் கிடைக்கும் பயன் அவன் பாதத்திலே கிடைக்கும். இதனை அகப்பேயே! நீ கண்டு தெளிக.

*தானற நின்ற இடம் - அகப்பேய்*
*சைவம் கண்டாயே*
*ஊனற நின்றவர்க்கே - அகப்பேய்*
*ஊனம் ஒன்று இல்லையடி* 52

**விளக்கம் :** எல்லாம் தான் என்று எண்ணி இருந்த தன்மை அறவே நீங்கி இருக்கும் இடமே சைவம் என்பதைக் கண்டு கொள். ஒரு கால் ஊன்றி நிற்கின்ற இறைவனைச் சார்ந்தவர்க்கு எந்தவிதக் குற்றமும் இல்லை.

*சைவம் ஆருக்கடி - அகப்பேய்*
*தன்னை அறிந்தவர்க்கே*
*சைவம் ஆனஇடம் - அகப்பேய்*
*சற்குரு பாதமடி* 53

**விளக்கம் :** சைவம் யாருக்கு? என வினவினால் அது தன்னை அறிந்தவர்க்கே. ஆதலால் சைவம் இருக்குமிடம் சற்குரு பாதமே.

*பிறவி தீரவென்றால் - அகப்பேய்*
*பேதகம் பண்ணாதே*
*துறவி ஆனவர்கள் - அகப்பேய்*
*சும்மா இருப்பார்கள்* 54

**விளக்கம் :** இந்தப் பிறவி நீங்க வேண்டுமெனில் குற்றங்களைச் செய்யாதே. ஒன்றும் செய்யாது இருப்பவர்கள் துறவி ஆவார்கள்.

*ஆர் அலைந்தாலும் - அகப்பேய்*
*நீ அலை யாதேடி*
*ஊர் அலைந்தாலும் - அகப்பேய்*
*ஒன்றையும் நாடாதே* 55

**விளக்கம் :** உலகிலே யார் அலைந்தாலும் அகப்பேயே! நீ மட்டும் அலையாதே. இந்த ஊர் அலைந்தாலும் மனமே! நீ ஒன்றையும் விரும்பாதே.

*தேனாறு பாயுமடி - அகப்பேய்*
*திருவடி கண்டவர்க்கே*
*ஊனாறும் இல்லையடி - அகப்பேய்*
*ஒன்றையும் நாடாதே* 56

**விளக்கம் :** இறைவன் திருவடி கண்டவர் மனத்தில் அருளாகிய தேனாறு பாயும். நீ ஒன்றையும் விரும்பாதே.

*வெள்ளையோ கறுப்பாமோ - அகப்பேய்*
*வெள்ளியும் செம்பாமோ*
*உள்ளது உண்டோடி - அகப்பேய்*
*உன்ஆணை உண்டோடி* 57

**விளக்கம் :** வெள்ளையோ? கறுப்போ? செம்போ? வெள்ளியோ? உள்ளது உள்ளபடி. அதற்கு உன் ஆணை உண்டோ?

*அறிவுள மன்னுமடி - அகப்பேய்*

*ஆதாரம் இல்லையடி - அகப்பேய்*

*அறிவு பாசமடி - அகப்பேய்*

*அருள்அது கண்டாயே* 58

**விளக்கம் :** அறிவுள்ள செயல்கள் நிலையாக இருக்கும். அதற்கான ஆதாரம் எதுவும் இல்லை. அறிவு என்பது பாசம். அதுவே அருள் என்பதைக் கண்டுகொள்.

*(தொடரும்....)*

## பட்டினத்தார் பைந்தமிழ் - 20

தமிழாகரர் தெ. முருகசாமி

(மேனாள் முதல்வர் - இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

துறந்தால் பட்டினத்தாரைப் போல் துறத்தல் அரிது என்பர். ஏனெனில் பற்றுகளை விடுங்காலம் தான் மிகவும் கணக்கிடப்படும் என்பதால் துறவு கொள்ளல் என்பது அரிதும் அரிதாகும்.

வேண்டின் உண்டாகத் துறக்க (342) என்பது வள்ளுவர் வாக்கு. எல்லா வாய்ப்புகளும் உள்ள போதே துறத்தல் வேண்டும் என்பது வள்ளுவர் கருத்து.

சித்தார்த்தராக இருந்த புத்தர் ; மனை, மனைவி, மக்கள், சுகபோக வாழ்வு என எல்லாம் இருக்கும் போதே துறந்தார். போதி மரத்தின் அடைக்கலம் அவரை ஆசிய சோதியாக ஒளிரச் செய்தது.

அதுபோலத்தான் தென்னாட்டில் பட்டினத்தார்க்கும். எல்லாம் இருக்கும் போதே வீடு, மனை, வாசல், வசதிகள் ஆகிய எல்லாம் துறக்கும் ஞானம் துளிர்த்தது. அந்த ஞான அனுபவத்தில் பாடிய பாக்கள் ***பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடல்கள்*** எனப் பதினோராந் திருமுறையில் கோயில் நான்மணி மாலை, திருக்கழுமல மும்மணிக் கோவை, திருவிடைமருதூர், மும்மணிக்கோவை, திரு ஏகம்பமுடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் ஒருபா ஒரு பஃது என ஐந்து நூல்கள் சேர்க்கப்பட்டன.

பட்டினத்தார் நகரத்தார் மரபினர். ஆயினும் அவரை வேளாண்குலத்துப் பிள்ளை என்னும் பின் ஒட்டுப் பெயர் சேர்த்து அழைக்கப் பட்டதற்கு அவரது பிள்ளைப் பிராயத்துத் துறவே காரணமாகும். அதனால்தான் மகான் தாயுமானவர்,

பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப் போல்
ஆரும் துறக்கை அரிதரிது !

என்றார்.

ஈண்டுப் பட்டினத்தார்க்குச் சுட்டும் பிள்ளை என்னும் பெயர் ஒருகுலப் பெயராகக் கருதாமல் அப்பெயர் இறைத் தெய்வத்திற்கும் சுட்டியதாக இலக்கியச் சான்றுகள் உள்ளதால் அந்த அருட்பெயர் அடியார்க்கும் சேர்த்துக் கூறப்பட்டதாக உணரலாம்.

ஞான சம்பந்தர் அந்தணராயினும் ஆளுடைய பிள்ளை எனப் பட்டார். பிள்ளைப் பிராயத்திலேயே அதாவது பதினாறு வயதிலேயே திருமணக் கோலத்துடன் முத்திப்பேற்றை யடைந்த சிறப்பைப் பிள்ளை என்ற சொற் குறிப்பு உணர்த்துகிறது எனலாம்.

அவ்வாறே அச்சொல் காரணம் பொருட்டில்லாமல், அதிராவடிகள் பாடியருளிய ***மூத்த பிள்ளையார் திருமும் மணிக்கோவை*** எனும் நூல் விநாயக் கடவுள் பற்றியதாக அமைந்துள்ளதால் தெய்வத்தைப் பிள்ளை எனக் கூறுவதன் தொடர்ச்சியில் பட்டினத்தாரும் ஞானம் கைவரப் பெற்ற தெய்வீகத்தால் அவர் பட்டினத்துப் பிள்ளையார் எனப்பட்டார் எனலாம்.

இந்நிலையில் அவர் ஞானம் பெற்றுப்பாடிய ஐந்து நூற் பாடல்களும் திருமுறைப் பகுப்பில் பதினோராம் திருமுறையில் சேர்க்கப் பட்டாலும் ஞானப் புலம்பலாகப் பாடியதை எல்லாம் தொகுத்துத் திருமுறையில் சேர்க்காமல் தனியே தரப்பட்டவைகளும் பட்டினத்துப் பிள்ளையார் பாடல்களாகச் சான்றோர்களால் பாராட்டப்படுகின்றன. அவைகள், (1) கோயில் திருஅகவல் (2) கச்சித் திருஅகவல் (3) திரு ஏகம்பமாலை (4) திருத்தில்லை முதலாகச் சில சிவத் தலங்களில் பாடியவை என்பனவாகும்.

அகவல் என்றால் கூவி அழைத்தல் என்பது பொருள். பதினோராம் திருமுறையில் சேர்க்கப்பட்ட கோயில் நான்மணி மாலை போல அத்திருமுறையில் சேர்க்கப்படாத கோயில் திரு அகவல் என்பது திருச்சிறம்பலமாம் சிதம்பரத்தைக் குறிப்பதாகும்.

உலக வாழ்வியல் என்பது தோற்றம், வாழ்வு, மறைவு என்ற

முக்கூட்டுத் தொடர்பின் சுழற்சியாகும். வண்டிச் சக்கரமானது மேலும் கீழுமாகக் சுழலுதல் போலத் தோன்றிமறையும் தத்துவத்தில் நிலையாமை என்ற ஒன்று கண்டறியப்பட்டது.

நிலையாமையே நிலைத்தது என்பதால் அந்நிலையாமையை எதிர்த்து நிலைக்கச் செய்ய வழி தேடிய போதுதான் அய்யன் திருவள்ளுவர்,

*அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்*
*அற்குப ஆங்கே செயல்* (333)

என்ற குறள்வழி ஓர் உண்மையை மேலாண்மை அளவு கோலாக எல்லாவற்றையும் அடக்கிய அளவில் பொதுமைப் படுத்தினார். செல்வம் நிலையாமையை நிலைக்கச் செய்ய இக்குறள் வழி கூறினாலும் இதனை அளவு கோலாகக் கொண்டே யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை, வாழ்வு நிலையாமை ஆகியவற்றை நிலைக்க வழிதேட வேண்டும் என்பது கருத்து.

எடுத்துக் காட்டாக ஒன்றை உணரலாம். ஐயடிகள் காடவர்கோன் என்பவர் பாடிய திருத்தல (க்ஷேத்திர) வெண்பா என்னும் நூலில் பாடப்பட்டவை யாவும் (24 பாடல்கள்) நிலையாமையை நிலைக்கச் செய்யும் எதிர் நீச்சலுக்கான அறிவுரையைப் பகர்வனவாக உள்ளன.

*ஓடுகின்ற நீர்மை ஒழிதலுமே உற்றாரும்*
*கோடுகின்றார் மூப்பும் குறுகிற்று - நாடுகின்ற*
*நல்லச்சிற் றம்பலமே நண்ணாமுன் நன்னெஞ்சே*
*தில்லைச்சிற் றம்பலமே சேர்.*

இப்பாடல் எல்லா நிலையாமையையும் சுட்டினாலும் அதனைத் தில்லைச் சிற்றம்பலத்தை நினைத்து வாழ்ந்தால் நிலைக்கச் செய்ய முடியும் என்கிறார் ஐயடிகள்.

நல்லச்சிற்றம்பலமே என்றதை நல், அச்சு, இற்று, அம்பலமே எனப் பிரித்துப் பொருள் உணர வேண்டும். உடம்பை அச்சு என்றார் அடிகள். உடம்பு - உயிர் போய்விட அழியும். அப்போது சுடுகாடு (அம்பலம்)தான் உடம்புக்கான இடமாகி விடும். இதனால் உயிர் உடம்பினுள் இருக்கும் போதே சிதம்பர தரிசனம் செய்ய வேண்டும். அதைத்தான் தில்லைச் சிற்றம்பலமே சேர் எனப்பட்டது.

சேர்தல் என்பது சென்று வணங்குவதைக் குறித்தாலும் இடைவிடாது நினைத்து வழிபட வழிபட வழிதிறக்கும் என்ற கருத்திலும் கூறப்பட்டது. அடிசேர்ந்தார், தாள் சேர்ந்தார் எனக் கூறிய வள்ளுவரது கருத்து யாதெனில் இடைவிடாது நினைத்தல் என்ற கருத்திலாகும் என்பதே பொருள்.

இந்த நினைத்தலைத்தான் பட்டினத்தார் கோயில் திருஅகவல் தொடக்கத்தில் நினைமின்! நினைமின் ! மனமின்! என மனதை முதலில் நினைக்கப் பழக்கினார்.

நினைக்க நினைக்க மனம் செம்மைப்படும். இதைத்தான் மணிவாசகர் நினைப்பற நினைந்தேன் என்றார். அதாவது இறைவனை நினைக்கிறோம் என்ற நினைப்பில்லாமலேயே நினைத்தல். இஃது ஓர் அனிச்சைச் செயல். நற்றவா உனை நான் மறக்கினும் சொல்லும்நா நமச்சிவாயவே என்று சுந்தரர் கூறியவாறு தன்னையறியாது அமையும் பழக்கமாகும்.

இந்நிலையில் இறைவனை நீள நினைக்கும் நினைப்பால் நிலையாமைகள் நிலைப்பதற்கான வழி ஏற்படும் என்ற கருத்தைப் பட்டினத்தார் கோயில் திருஅகவலின் முதல் பாடலிலேயே பதிவு செய்கிறார்.

உலக வாழ்க்கையானது பொய்மயமான கானல் நீர் போன்றது. பிறவிப் பெருங்கடலில் உயிர்கள் பிறந்தும் இறந்தும் அலைமோதுகின்றன. இன்பதுன்ப சுழற்சியில் உலகம் அல்லாடுகிறது. பலப்பல வேறுபாடும் மாறுபாடுகளும் நிறைந்த வாழ்வியல் முறைகளைப் பட்டினத்தார் மனதை முன்னிலைப்படுத்தி ஞானப் புலம்பலாகக் கூறுகிறார்.

முதற் பாடல் 47 வரிகளைக் கொண்டது. நினைமின் மனனே! நினைமின் மனனே! என்ற தொடரை முதலிலும் முடிவிலுமாகக் கூறும் நிலையில் மனமது செம்மையானால் மந்திரம் செபிக்க வேண்டாம் என்ற உண்மையின் சூக்குமமாகப் பட்டினத்தார் பாடலை இருகூறாகக் கூறுகிறார்.

பாடலின் முதற் பகுதியில் நிலையாமைகளின் அவலங்கள் பலவாறாகப் பேசப்படுகின்றன. 1 முதல் 34 வரிகளுக்குப் பிறகு 35 - 47 வரை தில்லைக் கூத்தனை வருணிக்கிறது.

*அலகைத் தேரின் அலமரு காலின்*
*உலகப்பொய் வாழ்க்கையை உடலை ஓம்பற்க!*

எனப் பட்டினத்தார் கானல் நீர் போன்ற வாழ்க்கையை நிலையென நம்பற்க என்று கட்டளை இடுகிறார். உடல் என்பது ஐம்புல நுகர்வுக்கு உரிய தாயினும் இந்த ஐம்புலங்களின் தன்மையை ஓர்ந்து நேர் சீரான வாழ்வை மேற் கொண்டால் வாழ்வாங்கு வாழலாம் என்பதைப் பட்டினத்தார் உடலுறு வாழ்க்கையை உள்ளுறத் தேர்ந்து என்ற தொடரால் (32) சுட்டி அறிவுறுத்தினார்.

இதில் தேர்ந்து என்பது நயப்புடைய சொல்லாகும். உடம்பினது இழி நிலையை உள்ளுற ஆராய்ந்து என்பது பொருள். பாடலின் தொடர்ச்சிக்கேற்ப உடம்பும் உயிரும் அழுக்காயினும் அவற்றை நீக்க,

*கடிமலர்க் கொன்றைச் சடைமுடிக் கடவுளை*
*ஒழிவரும் சிவபெரும் போக இன்பத்தை*
*நிழலெனக் கடவா நீர்மையொடு பொருந்தி*
*எனதுஅற நினைவுஅற இருவினை மலம்அற*
*வரவொடு செலவற இகபரம் அறஓரு*
*முதல்வனைத்தில்லையுள் முளைத்தெழும் சோதியை*
*அம்பலத் தரசனை ஆனந்தக் கூத்தனை*
*நெருப்பினில் அரக்கென நெக்கு நெக்குருகித்*
*திருச்சிற்றம் பலத்து ஒளிரும் சிவனை*
*நினைமின் மனனே ! நினைமின் மனனே !*

என்கிறார் பட்டினத்தார்.

உடலைப் பொய் வாழ்க்கையின் பொருட்டு ஓம்பற்க எனப் பட்டினத்தார் கூறினாலும் அவ்வுடலே உயிரைத் தாங்கியுள்ளதோடு அவ்வுயிரோ இறைவனைத் தாங்கியுள்ளதால்தான் உடலுறு வாழ்க்கை தேர்ந்து என்றார். திருமூலர், இவ்விரு நிலைகளைச் சுட்டி ஓர் உண்மையை உணர்ந்து கையில் காற்றுள்ள போதே தூற்றிக் கொள் என்றபடி உடலுள் உயிருள்ள போதே அம்பலவனை நினை என்றார் பட்டினத்தார். அதாவது இறைவனை நினைத்தற்கு இவ்வுடல் கருவியாதலால் தேர்ந்து எனப்பட்டது. உயிர் – உடம்பின்றித் தனித்து நின்று உய்தி பெற முடியாததலால்,

*உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்*
*உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்*
*உடம்புளே உத்தமன் கோயில்கொண் டான்என்று*
*உடம்பினை யானிருந்து ஓம்புகின் றேனே.* (705)

என்றார் திருமூலர்.

இப்பாடலில் பட்டினத்தார் தொழுதும் அழுதும் பாடும் நிலையில் துன்ப நீக்கத்தை அற என்ற சொல்லால் உணர்த்தியது மிகச் சிறந்த சொல்லாட்சியாகும். கடிமலர்க் கொன்றைச் சடைமுடிக் கடவுளை எப்படித் தொழவேண்டும் எனில்,

*எனதற நினைவற இருவினை மலமற*
*வரவொடு செலவற மருளற இருளற*
*இரவொடு பகலற இகபரம் அற, ஒரு*
*முதல்வனை நினைமின் !*

என்கிறார்.

யான் எனது என்னும் அகப்பற்றும் புறப்பற்றும் துவரக் (முற்றிலுமாக) கெட வேண்டும். இருவினைகளுடன் புலன்களும் பிறந்திறந்துழலும் சன்மமும் அறியாமையும் இம்மை மறுமைப் பற்றும் ஆகிய எல்லாம் அறும் போதே ஈசன் வெளிப்படுவான்.

அற்றது பற்றெனில் உற்றது வீடு என்ற நம்மாழ்வார் வாக்குப் படியும் சும்மா இரு சொல்அற என்ற அருணகிரி நாதர் வாக்குப்படியும் தன்னை மறந்த லயம் அடைந்தாரே இறைவனது முத்திப்பேறினை எட்டமுடியும் என்பதால் பட்டினத்தார் தீயிலிட்ட அரக்கு போன்று மனம் நெகிழ்ந்து நெகிழ்ந்து உருகினால் உய்யலாம் என்றார். அதாவது வாயார வாழ்த்துதல் போல் அன்பினால் நினைக்க நினைக்க நெஞ்சுளே புக்குநிற்பான் பொன்னார் சடைப் புண்ணியன் என அப்பரடிகள் கூறியதற்கேற்பவும் வாழ நினைவூட்டினார் எனலாம்.

இங்ஙனமாய் ஞானப் புலம்பலில் பட்டினத்தார் ஆனந்தத் தாண்டவம் காட்டி ஆண்டு கொண்டருள் என வேண்டும் திறத்தை அடுத்துக்காண் போமாக !

*(தொடரும்...)*

# திருக்குறள் தெளிவுரை
(ம. கார்மேகம்)

## ஊழ்இயல்

### ஊழ் (விதி, முறைமை)

**1. ஆகுஊழால் தோன்றும் அசைவுஇன்மை கைப்பொருள்**
**போகுஊழால் தோன்றும் மடி.**

கைப்பொருள் ஆகு ஊழால் - ஒருவனுக்குக் கையில் பொருள் சேர்வதற்கான விதியினால் ; அசைவு இன்மை தோன்றும் - சோர்வு இன்மை தோன்றும் ; போகு ஊழால் - அப்பொருள் போவதற்கான விதியினால்; மடி தோன்றும - சோம்பல் உண்டாகும்.

ஒருவனுக்குக் கையில் பொருள் சேரும் விதியினால் அவன் முயற்சி செய்வான்; பொருள் போவதற்கான விதியினால் அவனுக்குச் சோம்பல் உண்டாகும்.

**2. பேதைப் படுக்கும் இழவுஊழ் அறிவகற்றும்**
**ஆகல்ஊழ் உற்றக் கடை**

இழவு ஊழ் - பொருளை இழப்பதற்கான விதி; அறிவு - அறிவுடையனாயினும்; பேதைப் படுக்கும் - அறியாமையின் பாற்படுத்தும்; ஆகல் ஊழ் உற்றக்கடை - பொருள் ஆவதற்கான விதி உண்டானால்; அகற்றும் - அறிவு அவ்வறியாமையை நீக்கும்.

பொருளை இழப்பதற்கான விதி அறிவுடையவனை அறியாமையின் பாற்படுத்தும்; பொருள் ஆவதற்கான விதி உண்டானால் அவனது அறிவு அவ்வறியாமையை நீக்கும்.

**3. நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றும்தன்**
**உண்மை அறிவே மிகும்.**

நுண்ணிய நூல்பல கற்பினும் - நுட்பமான நூல்கள் பலவற்றைக் கற்றாலும்; மற்றும் - பின்னும்; தன் உண்மை அறிவே மிகும் - விதியினால் அவனிடம் உள்ள இயல்பான அறிவே மேலோங்கும்.

ஒருவன் எவ்வளவுதான் நுட்பமான நூல்களைக் கற்றாலும் விதியின் காரணமாக அவனுடைய இயல்பான அறிவே மேலோங்கும்.

**4. இருவேறு உலகத்து இயற்கை திருவேறு**
**தெள்ளிய ராதலும் வேறு.**

உலகத்து இயற்கை - விதியினால் உலகத்தின் இயற்கை ; இருவேறு - இரண்டு வேறுபாடுகள் உள்ளன ; திருவேறு - செல்வம் உடையராதல் வேறு; தெள்ளியராதல் வேறு - அறிவுடையராதல் வேறு.

விதியினால் உலகத்தில் இரண்டு கூறுகள் உள; செல்வம் உடையவராகவும், மற்றொருவர் அறிவுடையராதலும் என அவை இரண்டாகும்.

**5. நல்லவை எல்லாஅம் தீயவாம் தீயவும்**
**நல்லவாம் செல்வம் செயற்கு.**

நல்லவை எல்லாம் - நல்ல முறைமைகள் எல்லாம்; தீயவாம் - விதியினால் தீயனவாகும் ; தீயவும் - தீய முறைமைகள் ; நல்லவாம் - நல்லன ஆகும் ; செல்வம் செயற்கு - பொருள் ஆக்குவதற்கு.

பொருளை ஆக்குவதற்குச் செய்யும் நல்ல முறைமைகள் எல்லாம் விதியினால் தீயனவாகும் ; தீய முறைமைகள் கூட நல்லன ஆகும்.

**6. பரியினும் ஆகாவாம் பாலல்ல உய்த்துச்**
**சொரியினும் போகா தம.**

தம - தம்முடைய பொருள்கள்; பரியினும் ஆகாவாம்; வருந்தினாலும் நில்லாவாம்; பாலல்ல - விதியில்லாத; உய்த்துச் சொரியினும் போகா - எடுத்துச் சென்று சொரிந்தாலும் போக மாட்டாவாம்.

சேரும் விதியில்லாத பொருள்களை வருந்திக் காத்தாலும் நில்லாவாம்; அப்பொருள்களை எடுத்துச் சென்று கொட்டினாலும் தமக்கென்று உரியவை போகா.

**7. வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி**
**தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது.**

வகுத்தான் வகுத்த வகையல்லால் - இறைவன் வகுத்த வழியில்லாது; கோடி தொகுத்தார்க்கும் - கோடிக்கணக்கில் பொருளைச் சேர்த்தவர்க்கும் ; துய்த்தல் அரிது - நுகர்வது முடியாது.

கோடிக்கணக்கில் பொருளைச் சேர்த்தவர்க்கும் இறைவன் வகுத்த வழியில்லாமல் நுகர்வது முடியாது. அப்பொருளை நுகர்வதற்கும் விதி வேண்டும்.

**8. துறப்பார்மன் துப்புர வில்லார் உறற்பால**
**ஊட்டா கழியும் எனின்.**

துப்புரவு இல்லார் - நுகர்ச்சி இல்லாதவர் ; துறப்பார்மன் - பொருளைத் துறந்துவிடுவர்; உறற்பால - ஏற்படவேண்டியவற்றை ; ஊட்டா கழியும் எனின் - ஏற்படுத்தாது விதி விட்டுவிட்டால்.

ஒருவருக்கு ஏற்பட வேண்டிய முயற்சியினை விதி ஏற்படுத்தாமல் விட்டுவிட்டால் நுகர்ச்சி இல்லாதவர் பொருள்களைத் துறந்துவிடுவார்.

**9. நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்**
**அல்லற் படுவ தெவன்.**

நன்றாங்கால் - நல்லது ஆகும் போது; நல்லவாக் காண்பவர் - நல்லனவாகக் காண்பவர்கள்; அன்றாங்கால் - நல்லது அல்லாதது ஆகும் போது; அல்லற் படுவ தெவன் - நல்லது அல்லாததைக் கண்டு துன்பப்படுவது எதனால்?

நல்லன ஆகும் போது நல்லனவாகக் கண்டு நுகர்பவர்கள் நல்லன அல்லாதவை ஆகும்போது ஏன் அவற்றைக் கண்டு துன்பப் பட வேண்டும். அவற்றையும் ஏற்க வேண்டும் என்பது கருத்து.

**10. ஊழின் பெருவலி யாவுள மற்றொன்று**
**சூழினும் தான்முந் துறும்.**

ஊழின் - விதியை விட; பெருவலி யாவுள - பெரும் வலிமையுடையன எவை உள்ளன? மற்றொன்று சூழினும் - விதியை விலக்க வேறு வழியை எண்ணினாலும் ; தான் முந்துறும் - விதிதான் முன்னே நிற்கும்.

விதியை விலக்க வேறு வழியை எண்ணினாலும் அந்த விதிதான் முன்னே நிற்கும்; எனவே விதியை விடப் பெரும் வலிமை உள்ளவை எவையும் இல்லை.

*(தொடரும்...)*

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

## உலவாக்கிழி அருளியது

பாண்டியன் குலபூஷணன் பெரிய வள்ளலாக விளங்கினான். சோமவார, அஷ்டமி, சதுர்த்தி என்னும் விரதங்களை மிகுந்த சிரத்தையுடன் அனுஷ்டித்து வந்தான். அதனாலே, அவனுக்கு மிகவும் கர்வம் உண்டாயிற்று. கர்வம் மிகுந்து விட்டதாலே பாண்டியன் நாட்டிலுள்ள மறையவர்களை மதிக்காமல் அலட்சியம் செய்து வந்தான். அதனால் மழை பெய்யவில்லை; மறையவர் வறுமையால் வாடியதால் வேதம் ஓதுவதைக் கைவிட்டனர். யாக யக்ஞங்கள் நின்றுவிட்டன. நாட்டிலே எங்கும் வறுமை தாண்டவம் ஆடியது. இதை உணர்ந்த குலபூஷணன் உளம் வருந்தினான்.

ஒரு சோமவாரத்தன்று திருக்கோவிலுக்குச் சென்றான். பொற்றாமரைத் திருநீரிலே நீராடிவிட்டுச் சித்தி விநாயகரை வணங்கியபின்னர் மீனாட்சியம்மையையும் வணங்கிர சோமசுந்தரப் பெருமான் முன்பு அஞ்சலி செய்து நின்று, பெருமானே ! உயிர்களுக்கெல்லாம் உயிரானவரே ! பாண்டிய நாட்டு உயிர்களெல்லாம் பசியால் வருந்துவது ஏனோ? அடியேனது பொருள்களெல்லாம் சிவபுண்ணிய கைங்கரியங்களிலேயே சென்றன. எளியேனது துன்பம் நீங்குமாறு திருவருள் புரிய வேண்டும் என்று இறைஞ்சினான். இறையவர் பாண்டியனது பிழையை உணர்ந்ததால் செவி சாய்க்காதது போலிருந்தார். பாண்டியன் அரண்மனை சேர்ந்தான். சிவபெருமானைச் சிந்தித்தவண்ணம் தரையிலே கிடந்துநித்திரை செய்யப் போனான். கனவிலே சிவபெருமான் சித்த மூர்த்தியாய் எழுந்தருளினார். பாண்டியனே ! என்பால் சிறந்த பக்தி பூண்டவன் நீ, செங்கோலாட்சி புரிபவன். இருந்தும் உன்னிடம் ஒரு குறை இருக்கிறது. நீ மறை ஓதும் வேதியர்களை மதிக்காமல் இருந்துவிட்டாய், ஆகையால், நாட்டிலே வேள்விச் செல்வம் குறைந்துவிட்டது. வேதமே நமது இருக்கை, வாகனம், கண், வாக்கு சக்தி, வடிவம் எல்லாம். இப் பெரும் சிறப்புடைய வேதம் ஓதுபவர்கள் அந்தணர்கள். வேதியர் செய்யும் வேள்வியே மழைக்கும் காரணம். வேதத்தவர்களை நீ நிரம்பவும் அலட்சியம் செய்து விட்டாயே. இனி நீ

அந்தணர்களைப் போற்றி வருவாயாக. யாம் உனக்கென ஓர் உலவாக்கிழி அருள்கின்றோம். இவ்வுலவாக்கிழியிலிருந்து எவ்வளவு பொன்னை எடுத்துச் செலவழித்தாலும் அது குறையாமலிருக்கும். இதனை வைத்துக் கொண்டு நாட்டில் உள்ள வறுமையைப் போக்குவாய் என்று திருவாய் மலர்ந்தருளிப் பாண்டியன் கையிலே உலவாக்கிழியை ஈந்து, நெற்றியிலே விபூதியை இட்டு மறைந்தருளினார்.

குலபூஷண பாண்டியன் உடனே விழித்தெழுந்தான். தன் கனவு நினைவாகியிருப்பதைக் கண்டான். சோமசுந்தரக் கடவுளின் திருவடியே என்று கருதிப் பொற்பையை தனது தலையிலே வைத்துக்கொண்டு ஆனந்தத் தாண்டவம் செய்தான். பின்னர் தனது மந்திரிகளிடத்திலும் சேனாதிபதிகளிடத்திலும் கிழியைக் காண்பித்துக் கனவு நிகழ்ச்சிகளைச் செப்பினான்.

குலபூஷணன் உலவாப் பொற்கிழியை அரியணையின் மேல் வைத்துக் கோலாகலமாகப் பூசை செய்தான். சோமசுந்தரக் கடவுளாகவே மதித்துக் கிழியினை வழிபட்டான். பிறகு அந்தப் பையின் கட்டை அவிழ்த்து அதிலிருந்து பொன்னை எடுத்து மறையவர்களுக்கும், யாக யக்ஞங்களுக்கும், ஏனைய நற்காரியங்களுக்கும் அளவற்றபடி வாரி வாரி வழங்கினான். பாண்டியனும் ஏனையோரும் ஆச்சரியப்படுமாறு கிழியில் இருந்த பொன் அளவு குறையாமலிருந்தது.

உலவாக் கிழியிலிருந்து விளைந்த பொன்னைக் கொண்டு குலபூஷண பாண்டியன் சோமசுந்தரக் கடவுளது திரு விமானத்தைப் பொன்னால் இழைத்தான்; மீனாட்சியம்மையின் திருக் கோவிலையும், அறுகால் பீடத்தையும், கோபுர வாசலையும் அழகுறப் பணிசெய்தான்.

பாண்டியநாடு செல்வச் சிறப்பால் தழைத்தோங்கியது. வேதியர்களும் வையா கரணர்களும், நியாயிகளும், சிவவிரதிகளும், சிவாகமியர்களும், துறவிகளும் வறுமையால் வாடாது செழிப்போடு வாழ்ந்து வந்தனர்.

## மடாலய நிகழ்வுகள்

கோவிலூர் திருமடத்தின் 12ஆவது குருமகா சன்னிதானமாக அமர்ந்து அருளாட்சி புரிந்தும், கல்வி நிறுவனங்களை நிறுவியும், சமுதாயச் சேவைகளை உருவாக்கியும் கோவிலூர் மடாலயத்தை உலக அறியச் செய்த குருநாதர் வணக்கத்திற்குரிய தெய்வத்திரு. நாச்சியப்ப சுவாமிகள் அவர்களின் 7ஆவது குருபூஜையை முன்னிட்டு 12.10.2018 அன்று காலை 10.00 மணி அளவில் கோவிலூர் ஆண்டவர் கலையரங்கில் கருத்தரங்கம் நடைபெற்றது. கோவிலூர் ஆதீனம் சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் அவர்கள் கருத்தரங்க விழாவிற்குத் தலைமை வகித்து ஆசியுரை வழங்கினார்கள். குருபூஜை விழாவை முன்னிட்டு நடைபெற்ற பல்வேறு போட்டிகளில் கலந்து கொண்டு வெற்றி பெற்ற மாணவர்களுக்கு, சாகித்ய அகாதெமி பாலபுரஷ்கர் விருதாளர் குழந்தைக்கவிஞர் செல்ல கணபதி அவர்கள் பரிசு வழங்கிச் சிறப்பித்தார்கள். திருக்குறள் பேரவைத் தலைவர் மேலை. பழனியப்பன் அவர்கள் வாழ்த்துரை வழங்கிச் சிறப்பித்தார்கள்.

கோவிலூர் மடாலய வளாகத்தில் சனாதன தர்ம உலகப் பல்கலைக்கழக அறநிலையின் சார்பில் நடத்தப்படுகின்ற கல்வி நிறுவனங்களை நிறுவிய வணக்கத்திற்குரிய தெய்வத்திரு நாச்சியப்ப சுவாமிகளைப் போற்றும் வகையில் நிறுவனர் நாள் விழா 13.10.2018 அன்று மாலை 4.00 மணி அளவில் கோவிலூர் ஆண்டவர் கலையரங்கில் நடைபெற்றது. இந்த விழாவில் மணிவாசகர் பதிப்பகத்தின் உரிமையாளர் ச.மெ. மீனாட்சி சோமசுந்தரம் அவர்கள் விழாச் சிறப்புரை ஆற்றினார்கள். மணிவாசகர் பதிப்பகத்தின் மேலாளர் ஆகிய ராம.குருமூர்த்தி அவர்கள் வாழ்த்துரை வழங்கினார்கள்.

இதனைத் தொடர்ந்து 15.10.2018 அன்று தெய்வத்திரு. நாச்சியப்ப சுவாமிகள் குருபூஜை விழா மிகசிறப்பாக நடைபெற்றது.

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**